5. 2

வெளியீடு எண் 69.

# சிவப்பிரகாசம்

( மூலமும், ஆங்கில மொழிபெயர்ப்பும் )



தருமபுர ஆதீனம்.

*Published*

*In revered memory of*

## Sri-la-Sri Shanmuka Desika Gnanasambanda Paramacharya Swamigal

*24th in the Holy Line of Dharmapuram Adhinam*

*on the 10th Day of his attaining Paramukti.*





திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# SIVAPRAKASAM

of

UMAPATHI SIVAM




With English Translation by

Late K. Subramanya Pillai, M. A., M. L.,

Professor of Tamil, Annamalai University.

Published according to the orders of

His Holiness Sri-la-Sri Subramanya Desika Gnanasambanda Paramacharya Swamigal,

25th in the Holy Line of Dharmapuram Adhinam

by

Sri-la-Sri Mouna Somasundara Thambiran Swamigal,

of Trichy Mouna Mutt attached to the Adhinam.

1945.

உ

குருபாதம்

# முன்னுரை

இந்நூல் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. சிவஞானபோதம், சிவஞானசித்தியார் என்னும் இருநூல்களின் பொருளும் இனிது விளங்கச் சார்பு நூலாக இருப்பது. தன்னை ஓதியுணரும் பக்குவான்மாக்களுக்குச் சிவம் பிரகாசிக்கச் செய்வது. நூறு திருவிருத்தங்களை யுடையது. பொது, உண்மை என இரு அதிகாரங்களாக இலங்குவது. இறைவனியல்பை எடுத்தியம்புவது. ஆன்மாவின் இலக்கணங்களையறிவிப்பது. ஆன்மாவைத் தடைசெய்து நிற்கும் பாசத்தினிலக்கணங்களைப் பகர்வது. ஆன்மாக்களடையும் ஐவகையவத்தைகளின் அமைதியையும், ஆண்டவன் ஆன்மாக்களின் பக்குவநிலைக்கேற்ப உணர்த்தும் தன்மையையும், ஞானவியல்பையும், அதன் பயனையும், பஞ்சாக்கரப்பெருமையையும், அணைந்தோரியல்பையும் எடுத்துக்கூறுவது. இனிதிற் பொருளுணரத்தக்க எளிய நடையில் அமைந்தது. முதனூல்களில் மொழியப்பெற்ற பொருள்களைச் சுருங்கவும் விளங்கவும் கூறுவது. "சிவப்பிரகாசத் தொன்னூல், அற்றநிலை யாங்கதுவே சீவன்முத்தனுக்குவிக்கும்" என்ற உயர்ந்தோர் வாக்கு இந்நூற்பெருமைக்கு ஓரெடுத்துக் காட்டாகும்.

இந்நூலை யாக்கிய ஆசிரியர் ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள். 'கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்ற சிறப்பா்'' களாகிய தில்லைவாழந்தணர் குலத்து அவதரித்தவர்கள். இவர்களது தந்தையார் நடராஜ தீக்ஷிதர் என்னும் நாமமுடையவர் என்று ராஜேந்திரபுர மான்மியம் கூறுகின்றது. சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் எட்டுநூல்கள் இவர்களியற்றியனவே. திருமுறை கண்ட புராண முதலாக ஏழுசமயநூல்கள் இவர்களால் அருளப்பெற்றன. வடமொழியில் உபாகமங் களில் ஒன்றாகிய பௌஷ்கராகமத்திற்குப் பேருரை யொன்றும் எழுதியுள்ளார்கள். இது பௌஷ்கர விருத்தி எனவழங்கும். மற்றும் நடராஜ சகஸ்ர நாமம், ஸ்ரீ ருத்ரம், சமகம், வாயுசம்ஹிதை முத லானவற்றிற்கும் பேருரை யருளியிருக்கின்றார்கள். 'யந்திர விதானம்' என்ற நூற்கு உரையும் (சிற்றுரை) ஆக்கியிருக்கின்றார்கள். ஸ்ரீமந் நடராசமூர்த்திக்கு நித்திய நைமித்திக பூஜை விதிகளைக்கூறும் 'பாதஞ்சல சூத்திரம்' என்பதும் இவர்கள் உதவியதே. 'நடராஜத்வனிமந்திர ஸ்தவம்' குஞ்சிதாங்கிரிஸ்தவம் முதலான தோத்திரப் பிரபந்தங்களும் செய்யப்பெற்றுள்ளன. ஆகம ஞான பாதங்களில் செம்பொருட் கருத்துக்களமைந்த சுலோகங் களைத் திரட்டித் தொகைநூல் ஒன்றும் வழங்கியிருக்கின் றார்கள். அதற்குச் சதரத்ன சங்கிரகம் என்றுபெயர். இவர்கள் காலம் சாலி சகம் 1235, கி.பி. 1313-ம் ஆண்டு. இந்நூலுக்கு மதுரைச் சிவப்பிரகாசனார் செய்தவுரை யொன்றும், காஞ்சி சிதம்பரநாத முனிவர் வரைந்தவுரை யொன்றும் உள்ளன. ஸ்ரீ-ல-ஸ்ரீ 24வது மகாசந்நிதானத் தின் திருவுளக்குறிப்பின்படி காலஞ் சென்ற கா. சுப்பிர மணிய பிள்ளை, M.A., M.L., அவர்கள் இந்நூலை ஆங்கிலத்

தில் மொழிபெயர்த்திருக்கின்றனர். இந்நூல் மொழி பெயர்ப்புடன் தருமபுர ஆதீனம், 24-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் நிலைவு வெளியிடாக வெளிவருகிறது.

இந்தக் குருமகாசந்நிதானம் அவர்களை, இருபத்து மூன்றாவது பட்டத்து எழுந்தருளியிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மகாசந்நிதானம் அவர்கள் தமது குறிவழிநின்று அருள்வழிகாட்டித் துறவரசு செலுத்த 26—6—33ல் ஞானபீடத்து எழுந்தருள்வித்தார்கள். அதுமுதல் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பன்னிராண்டு அருளாட்சிநடத்தித் தவப்பெருந்தலைவராக விளங்கினார்கள்.

இவர்கள் ஆட்சியேற்றதுமுதல் ஆதின ஆளுகைக்கு உட்பட்ட இருபத்தேழு தேவாலயங்களும் அடைந்த திருத்தங்கள் பல. தேவஸ்தான சொத்துக்களின் தரமும் பரப்பும் நன்கு கணக்கிடப்பெற்றன. வருவாய் சிதையாதுசேரக் குத்தகை விதிகள் ஒழுங்கு படுத்தப்பெற்றன. வருவாய் உயரத்தக்க வழிகள் பல காணப்பெற்றன. தென்னை, வாழை, மா, பலா, முந்திரி முதலிய பயன்தருமரங்கள் பயிராக்கப்பெற்றன. ஆதீனக் கோயில்களுக்கும் மடாலயத்திலுள்ள நடுநிலைக்காரியாலயத்திற்கும் உள்ள தொடர்பு அதிகமாக்கப்பெற்றது. சுருங்கக் கூறுமிடத்து மடத்துஸ்தாபனங்கள் சென்னை அறநிலையப் பாதுகாப்புக்கழகச் சட்டங்களினின்று விலக்குப்பெற்றிருப்பதே இந்தச் சந்நிதானத்தின் நேரிய நிர்வாகத்திற்குப் போதிய எடுத்துக்காட்டாகும்.

பல பணிசெய்த நலமுடைப் பெருமானுகிய இவர்கள் ஆட்சிக்காலத்து எல்லா ஆலயங்களும் இறையொளி விளங்கும் இல்லங்களாயின. இன்றியமையாத பல பணிகள் இயற்றப்பெற்றன. சிறப்பாகத் திருபுவனம் கோபுரப்பணியும், புள்ளிருக்குவேளூர் சண்முகவிலாச மண்டபத்திருத்தமும் வெளிச்சுற்று மதில் பணியும் செய்விக்கப்பெற்றன. திருக்கடவூரில் கோபுரம், ஆயிரக் கால் மண்டபம் முதலியவைகள் சீர்பெறுத்தப்பட்டன. சீகாழியில் உள்மண்டபங்களும், தேவஸ்தான கச்சேரிக் கட்டும் திருத்தியமைக்கப் பெற்றன. ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகட்குத் தனியாலயமும் எடுப்பிக்கப்பெற்றது. சுற்றுத் திருமதில்கள் உறுதியாகத் திருப்பணி செய் விக்கப்பெற்றன. மற்றும், திருவையாற்றில் உள் பிரகாரங்களும், திருப்பனந்தாளில் அம்பாள் கோயில் உட்பிரகாரமும் நன்கு செப்பனிடப்பெற்றது. மாயூரத் தில் ஸ்ரீ விஸ்வநாதசுவாமிகோயில் கட்டப்பெறுகின்றது. திருமுறைகள் எங்கும் எழுதப்பெற்றன. கோயில்களில் தூய்மையும், வெளிச்சமும் விளங்கவசதிகள் செய்விக்கப் பெற்றன.

திருவையாறு, சீகாழி, திருப்பனந்தாள், திருக்கடவூர் முதலான தலங்களில் மகாகும்பாபிஷேகங்கள் நடத்தப் பெற்றன. ஆதீனத் தொடர்பில்லாத பிற தலங்களில் நடக்கும் கும்பாபிஷேகத்திற்குப் பொருள் உதவியும் செய்யப்பெற்றன.

சமயம் வளர்த்த சம்பந்தர், இன்றியமையாத காலத்து இறை திருவருளால் அவதரித்துத் தென்தமிழ் நாட்டுச் சைவம்பரப்பியதுபோலக் காலநிலையறிந்து மக்கள் மனம் சமய வரம்பினிற்கச் சமயச்சொற்பொழிவுகள் செய்வித்

தார்கள். கண்டோர் வியக்கச் சித்தாந்தமாநாடு கூட்டினார்கள். திருமுறைவிழா நடத்தித் திருமுறைச்சிறப்பெலாம் செந்தமிழ்நாடு அறியச்செய்தார்கள். பிறராற் பற்பல இடங்களிற் கூட்டப்பெறும் மகாநாடுகளுக்கும், கழகங்களுக்கும் பலவகையுதவி பாலித்தார்கள். இளைஞர் உள்ளத்துச் சைவப்பயிர் தழையப் பாடசாலைகள் நிறுவினார்கள்.

கல்விப்பணிசெய்த கருணைவள்ளலாகிய இவர்களால் ஐம்பத்து மூன்றிற்குமேற்பட்ட நூல்கள் அச்சிடப்பெற்று இலவசமாகவும், எளியவிலைக்கும் வழங்கப்பெற்றன. எத்தேசத்தவரும் சித்தாந்தத்தேனுகர ஆங்கிலத்தில் சித்தாந்தநூல்கள் மொழிபெயர்க்கப்பெற்றன. தமிழ் மக்களுக்கு எப்போதும் சமயசம்பந்தம் இருத்தல் வேண்டும் என்பதற்காக ஞானசம்பந்தம் நல்கப்பெற்றது.

இவர்கள் புதுநகர்படைத்த புண்ணியனாகத் தருமை நகரையே திருத்தி எல்லாச்சுகாதார வசதிகளும், விளக்கு முதலிய வசதிகளும் பெறச்செய்தார்கள். இவர்களுக்கு நகரை யலங்கரிப்பதும், திருப்பணிகள் செய்து திருக்கோயிலை அழகுபெற ஆக்குவதுமே ஒரு விருப்புடைய விநோதமாக இருந்தன என்னலாம்.

ஏழைகளுக்கு இரங்கும் ஏந்தலாகிய இவர்கள் ஏழை மக்கட்கு அறுசுவையுண்டி அடிக்கடி அளித்து மகிழ்வதுண்டு. ஒருசேர ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளித்துக் காண்பதில் ஒருதனிமகிழ்ச்சி. இந்நிகழ்ச்சி "ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தாமுடைமை, வைத்திழக்கும் வன்கணவர்" என்ற வள்ளுவர் வாய்மொழியை மனத்துக்கொண்ட மாண்பாகும்.

உயிர்ப்பணிசெய்யும் உயரிய கருத்தால் மாயூர நகரில் மகளிர் கருவுயிர்க்குந் துன்பம் நீங்க பிரஸவ மருத்துவ விடுதி கட்டி ஏற்றன செய்திருக்கிறார்கள்.

பலரும்போற்றும்பண்பு இவர்களிடம் அமைந்திருந் ததை இரண்டாண்டுகட்கு முன்பு பல்வேறு அரசியல் கொள்கைகளைச் சார்ந்த பிரமுகர்கள் யாவரும் சேர்ந்து இவர்கள் ஆட்சித்திறத்தை, பணியின்பண்பை, அறிவின் செறிவை, ஆற்றலின் தோற்றத்தைப் பத்தாண்டு விழாவாகக் கொண்டாடினார்கள் என்பதே அறிவிக்குஞ் சான்றல்லவா?

ஒற்றுமைகாணும் உயரிய நோக்கால் திருவாவடு துறை மகாசந்நிதானம் அவர்கள் திருக்கடவூர்க்கு எழுந் தருளியகாலத்துச் செய்தநட்பினுயர்வை நாடு அறிந்து மகிழ்ந்தது. இவர்கள், இரண்டு ஆதீனங்களும், திருப் பனந்தாள் காசிமடமும் ஒன்றுபட்டுச் சமயப்பணியை மேற்கொள்ளத்தக்கவண்ணம் ஆட்சிபுரிந்தார்கள் என் பதும் அனைவரும் அறிந்த உண்மையாகும். மற்றும் இது வரை அச்சிடப்பெறாத ஆதீன சம்பிரதாய நூல்களும் சமய நூல்களும் பல வெளிவந்தன. மேலும் வெளிவரத் தக்க நூல்களை ஆராய ஆராய்ச்சிக்கூடம் ஒன்றும் அமைத் துள்ளார்கள்.

இவ்வண்ணம் பல்லாற்றானும் சைவசமயத்திற்கும் தமிழுக்கும் எல்லையற்ற பணிகள்செய்து, திருக்கோயிலைச் செவ்விபெறத்திருத்தி, வருவாய்பெருக்கி மடாலயத்தை வளம்பெறச்செய்த ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் எல்லாவகையானும் தம்வழி நடந்து பணிபலசெய்யும் ஆற்றல் வாய்ந்தவர்களும், வட

மொழியும் தென்மொழியும் கற்றுத்தேர்ந்தவர்களும் சமய சம்பிரதாய சீலர்களும், சமயசந்தானுசாரிய பெருமக்களிடத்துப் பேரன்பு படைத்தவர்களும், குருரூபங் காணும் குணக்குன்றுமாக விளங்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளை** 7—5—45-ல் ஞானபீடத்து எழுந்தருளுவித்து ஞான வாள்கொண்டு மக்கள் மனக்கோணல்நீக்கி, அறச்செங்கோல்தாங்கித் துறவரசுசெலுத்தி நீடுவாழ்க என ஆணை தந்து 20—5—45 ஞாயிற்றுக்கிழமை சிவாநந்ய சாக்ஷாத்கார சிவாநந்தாநுபவ நித்ய நிஷ்டைஎய்தினார்கள். இவர்கள் நினைவாக திருவடிக்கண் இந்த ஞானமலர் சாத்தப் பெறுகின்றது.

| | |
|---|---|
| மாயவரம், | **வித்துவான், ச. தண்டபாணி தேசிகர்,** |
| 29—5—45. | *தருமையாதின தமிழ்ப்புலவர்.* |

# PREFACE

"**Sivaprakasam**" is one of the fourteen authoritative works in Tamil which treat of the Saiva Siddhanta system of philosophy. Its reputed author, Saint **Sri Umapathi Sivacharya**, one of the traditional three thousand priests of Chidambarm temple, is the fourth in the chain of the linear preceptors of the celestial Truth, called the Saiva Santhana Acharyas. The authorship of eight of the fourteen works referred to above, Sivaprakasam included, is ascribed to him, and he has been the author of several other works, both in Tamil and in Sanskrit, the most important of them being the 'Koil Puranam' and the elaborate Sanskrit commentary on the Gananapada of Sri Paushkara.

Sivaprakasam stands foremost among the eight philosophic treatises composed by its author in Tamil, and is generally studied and referred to along with **'Sivagnana Bodham'**, the famous central work on Saiva Siddhanta philosophy given by the Great Infant-Saint **Sri Meykanda Devar**, and **'Sivagnana Siddhiyar'**, its secondary, written by his disciple **Sri Arulnandi Sivacharya**. These two great saintly seers are respectively the first and the second link of the celestial chain mentioned above, the third being Saint **Sri Maraignana Sambandhar**.

The aim of 'Sivaprakasam' is to give, in a clear and succinct manner, a plain summary of the central truths of philosophy expounded in the two works, Sivagnana Bodham and Sivagnana Siddhiyar, and to make the study of the Saiva Siddhanta system a little easier in its elementary stage before the more advanced and comprehensive books (Sivagnana Bodham and Sivagnana Siddhiyar), regarding the technicalities and abstruse and metaphysical questions are taken up.

This work is now published by the Adhinam with a prose rendering in English by the late Sri K. Subramania Pillai, M. A., M. L., in commemoration of the Siva Paripurana Gurupuja of **His Holiness Sri-la-Sri Shanmuka Desika Gnanasambandha Paramacharya Swamigal**, the twenty fourth in descent, of Dharmapuram Adhinam.

His Holiness ascended the throne of the holy Gnana-Peetam and assumed the headship of the Adhinam Mutt on 26th of June 1933. During the short period of about twelve years of his able administration, His Holiness showed organising ability of a very high order, raised the tone and discipline of the Mutt and the temples attached thereto to a high standard and has done the utmost for the propagation of the Saiva faith in all possible ways. The series of publications (more than fifty in number) which have seen the light of day during the regime of His Holiness has served to dispel the

darkness in the minds of thousands of Saivites and has flooded them with the light of the Lord. The ascent of His Holiness on the holy cadi of the Mutt may be said to mark the revival of Saivism in South India, and something very marvellous has been contributed by His Holiness for the revival and re-establishment of the real greatness, fame, and prestige of the holy order of the Saiva Mutts in South India, which have been its heritage ever since it was inaugurated by Sri Meykanda Devar, the rising sun of Saiva Siddhanta, who flourished in the first half of the 13th Century.

His Holiness has been a towering and powerful personality, full of sound common sense, and constructive original thoughts, blended with a calm and genial manner finding expression in occasional out-bursts of humour and a dignified reserved nature. Gifted with these qualities of head and heart to a remarkable degree, it is no wonder that His Holiness has endeared himself to one and all and revolutionised the system of organisation and administration of the mutt, effecting distinct improvements in the various realms ruled by him, and widening the scope, usefulness and purpose of the véry ancient institution which it was his privilege to preside over and direct.

It is evident that, when His Holiness took up the administration, he started with the earnest desire

that during his regime, Saiva Religion and philosophy should flourish, Tamil and Sanskrit learning should spread and, through proper upkeep and orderly maintenance of temples, the prosperity of the land should most effectively be promoted. It is this desire in His Holiness that brought the Mutt in contact with eminent men in the various walks of life, scholars, poets, and officials in the world outside and enabled all of them to estimate and appreciate the value and usefulness of the religious institutions.

Among the distinguished visitors to the Mutt mention may be made of His Excellency the Governor of Madras Sir Arthur Hope, His Excellency the Governor of French India Mon. Bonvin, Lady Bonvin, Mon. Thomas Aroul, President of the French India Legislative Assembly, The Administrator of Karikkal Territory, Ministers of the Madras Province, Sir P. T. Rajan, Dr T. S. S. Rajan. S. Ramanathan and others, Rajah Sir Annamalai Chettiar of Chettinad, Kumararajah Sir M. A. Muthiah Chettiar, Sir R. K. Shanmukham Chettiar, Sir R. S. Sarma, Mon. Sambasivam Chettiar, President of the Colonial Committee of French India, Sri Muthuranga Mudaliar, the District Official Heads, and the Presidents and Commissioners of the Madras Hindu Religious Endowments Board. All of them have expressed their high appreciation and pleasure on the occasion of their visits to the Mutt. His Holiness Sri. Kanchi Kamakoti Sankaracharya Swamigal has

paid a visit to Dharmapuram and performed worship in the local temple. He entertained a high regard for the reputed head of this institution.

The conduct of the grand Meykandan Siddhanta Conference in 1941 which lasted for three days and concluded with Tirumurai Conference and festival on the Avanimoolam day was acknowledged to be the unique of its kind. This conference and the first Decennial Rule Celebrations, under the distinguished presidency of Sachivothama Sir C. P. Ramaswami Ayyar, K. C. S. I., K. C. I. E., LL. D., the Dewan of Travancore State, of His Holiness have produced in the mind of the public a delightfully homely touch about the Dharmapuram Adhinam Mutt. These celebrations were the enlightening rays that made the Country realise the seriousness of the purpose of the institution of mutts.

The Adhinam, the greatness of which we are all so proud, was handed down to His Holiness by a long chain of Spiritual Heads of profound learning and thought, as a heritage, and His Holiness has done all he could by judicious improvements to render it more useful and attractive. The properties of the Adhinam are spread in several districts, some of them being in French India; the management of twenty seven temples, many of them very big, is vested with the Adhinam.

These have been creditably managed by considerably expanding the usefulness and the significance of the Central Head-quarters Office in the Adhinam Mutt exercising proper care and discretion in the matter of appointment of local agents, clearly defining the duties and responsibilities and office-routine of the establishment both at the Central Controlling Office and at the local offices, introducing the system of correspondence and control that is in vogue in the Government Departments, making adequate provision for effective supervision and above all working out suitable economic plans for each endowment so that its resources might be developed. It is a common saying that 'efficiency is a fine word, but economy is its shadow', and it may be said in the case of His Holiness that efficiency and economy delightfully mingled together. Wisdom is knowing what to do next; skill is knowing how to do; and virtue is doing it. The wisdom, skill and virtue of His Holiness may be summed up in the fact that the cash balance has increased from nominal, when he took up the management, to substantial in recent years, after meeting all items of legitimate expenditure, investments included.

His Holiness possessed a keen sense for aesthetic beauty and cultural arts. New constructions and renovations have been effected both in the mutt and the temples. An adequate idea of which can be gained by a casual look into the issue of

the first Decennial Rule. In them, one can find the synthesis of beauty, art, religion and philosophy. Mention may be made that the plan and design of such constructions were originally conceived by His Holiness and executed. The terraced mantapam made of granite in front of the mutt, supported by artistic pillars in which life-like models in relief of the dragon and stallion which is the embodiment of the sculptural skill, charming beauty and exquisite workmanship, the new Library which is the store house of wisdom, both spiritual and secular, the front block, the audience hall, the two entrances with the block next to the northern portico and a host of such beautiful constructions in many of the temples belonging to the mutt are the expression of the noblest responses from the noble and exalted mind of His Holiness to the appeal of art, and culture.

Now coming to the philonthropic work and social service of His Holiness, one cannot fail to think of the noble impulses which prompted His Holiness to think of establishing 'Women and Children Hospital and Welfare Centre' at Mayavaram, the foundation of which was laid by His Excellency the Governor of Madras. His Holiness was specially interested in improving the health conditions of the cheries, imparting elementary education to the children and poor-feeding.

In conclusion, His Holiness has served the cause of religion in numerous ways, some of them are, arrranging religious discourses and lectures on subjects of literary and religious importance by eminent luminaries in the mutt, and Devasthanams on all important occasions, aid to religious conferences held by other people, aid to kumbhabhishekam of famous temples, arranging special classes for teaching treatises on Saiva Siddhanta Philosophy, obtaining exclusive copyrights of important works on Saiva Siddhanta religion and philosophy, conducting Thevara and Veda Agama Patasalas, establishing libraries in the temples, and running the Meykandar Saiva Siddhanta College, Mayavaram.

Of the innumerable publications brought out at the cost of the Adhinam, special mention may be made of the elaborate commentary on 'Tirnavukkarasu Nainar Puranam' of Sekkilar by Sri C. K. Subramania Mudaliar of Coimbatore, the Tamil text-books on 'Light and Sound', the text-book on Tamil Shorthand and the translation into Tamil of the Yajur Veda.

The installation of a press by name 'Gnanasambandham' and the publication of the monthly journal of the same name therefrom serve to disseminate spiritual wisdom contained in the Tamil Scriptures, the Tirumurais, and the Philosophic

treatises on Saiva Siddhanta. Important agamic works such as Paushkara Vrithi, Kriya Deepika by Sri Sivagra Yogin, Sivagra Bhashyam, and the Aghora Siva Paddadhi with Nirmalamani Prabha have been purchased and distributed gratis to deserving persons.

Every kind of help has been rendered to war efforts. A donation of nearly a Lakh of rupees and investments amounting to more than 3 Lakhs on Defence of India bonds may be specified.

I shall be failing in my duty if I do not refer to my very happy connection with the Adhinam which I owe to His Holiness' kindness. It was on the occasion of the grand Meykandan Siddhanta Conference that I came in touch with the Adhinam, and ever since, my connection with the Adhinam grew more and more intimate and homely. His Holiness has always entertained a parentel love and affection for me. On the occasion of the Decennial Rule Celeberation, His Holiness was pleased to admit me into the fold of Adhinam Pulavars and the institution (Meykandar Saiva Siddhanta College, Mayavaram) which I serve, it must be mentioned, owes its very existence to His Holiness. I take this opportunity of sincerely acknowledging my deep debt of gratitude for all the good conferred on me by his gracious Holiness.

In fine, the harp of spiritual rule, which His Holiness took up like the master musician, swelled up the music of tune-less strings tuned to the notes of *Sivaprakasam*, the Light of Divine Grace. It is, therefore, in the fitness of things that his sacred and sweet memory should be cherished by means of this publication of 'SIVAPRAKASAM' with prose rendering in English, which was specially written at the instance of His Holiness.

Our grateful thanks are due to the present Mahasannidanam of the Adhinam. **His Holiness Sri-la-Sri Subrahmanya Desika Gnanasambandha Paramacharya Swamigal**, who has willed that this publication should see the light of day on such a solemn occasion. His Holiness has graciously been pleased to confer on me the pleasurable duty of penning this preface to the publication, for which I tender my humble and grateful thanks at his feet.

Any suggestion calculated to improve the English translation is heartily welcome.

Mayavaram,
29—5—45.

K. Vajjiravelu Mudaliar,
Dharmapuram Adhinam Tamil Pulavar,
Principal,
Meykandar Saiva Siddhanta College.



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

25-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி - உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# சிவப்பிரகாசம்

# SIVAPRAKASAM

காப்பு

ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு
களியார வரும்ஆனை கழல்நாளும் மறவாமல்
அளியாளும் மலர்தூவும் அடியார்கள் உளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

---

## Benedictory verse

Enlightened and free from thoughts of stern Karma shall become the hearts of the votaries who never forget to strew bee-humming blooms every day at the heroic feet of the Elephant Deity whose sacred form is Light Spiritual and who comes forth pouring out the must of divine wisdom and dispensing supreme delight (to fit souls).

## பாயிரம்

சிவம்

ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தி யாகி
உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காணத்
தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியிலும் உறவணங்கிப் போற்றல் செய்வாம். 1

---

## Dancing Siva.

1. On our head and heart we shall entertain, revere and cherish the beautiful lotus feet of Him, who is the source of the primordial rising light, whose form is grace and wisdom, whose spreading tresses are the seat of the honeyed flowers of Konrai, the crescent moon, the river Ganga and the glistening serpent and who, with intent to lift us from the endless chain of births, dances in the Common Hall of all souls to the applauding tunes of angels, of feasting the eye of mother Uma the protector of all the worlds.

சத்தி

பரந்தபரா பரையாதி பரன திச்சை
    பரஞானம் கிரியைபர போக ரூபம்
தருங்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
    தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்தஉபா தானங்கள் மேவி ஒன்றாய்
    விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்(து)
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
    அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். 2

---

## Goddess Sivagami.

2. On our head shall we receive the gracious feet-flowers of the mother who is the all-pervading Supernal power, the First Cause of all and the grace, wisdom, and energy of the Supreme Being. Her form is Divine mercy bestowing (on fit souls) the frame of supreme bliss. She is the energiser of the pure and impure Maya from which are evolved the the expansive basic substrata of all sorts of bodies, minds, worlds and substances. She is the many-sided, one holy energy of God, the seed of five grand functions of His and the eye witness in the beautiful Hall of the Divine Dance meant for annulling the woes of the world.

### விநாயகர்

நலந்தரநூல் இருந்தமிழின் செய்யுட் குற்றம்
நண்ணாமை இடையூறு நலியாமை கருதி
இலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
இணைவேல்கள் இகழ்ந்தகயற் கண்ணியொடும் இறை
கலந்தருள வரும்ஆனை முகத்தான் மும்மைக் [வன்
கடமருவி யெனநிலவு கணபதியின் அருளால்
அலர்ந்துமது கரமுனிவர் பரவவளர் கமலம்
அனையதிரு வடியிணைகள் நினைதல் செய்வாம். 3

---

## God Ganesa.

3. With a view to accomplish this work in high Tamil, free from faults of metre and grammar, and secure its unhindered completion and good use, we shall contemplate the pair of holy roseate feet, blossoming in grace to the pious song of the beelike saints, of the Elephant faced deity who is the Lord of the communities of angels and whose three fold must of wisdom gushes forth like a torrent and who was begotten by God Siva and his consort whose fish-like eyes, surpassing a pair of lances in beauty and adorned by natural red lines, leap as if to contend with the sparkling leaf-like ring jewels of the ear.

சுப்பிரமணியர்

வளநிலவு குலஅமரர் அதிபதியாய் நில
மயிலேறி வருமீசன் அருள்ஞான மதலை
அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற
உளமருவு சூரனுரம் எமதிடும்பை ஓங்கல் [லென்று
ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். 4

---

## God Muruga.

4. We shall meditate on the two feet of God Muruga who is the commander of high-born Devas of abiding opulence, the divine child of grace and wisdom riding the blue peacock, the spiritual guru of saint Agastiya, well-versed in countless sciences, scriptures and their branches, the hero who willed to fling his brilliant spear and cut in two the breast of Suran unmindful of his prowess, the hill of Krounja and my misery, and the lover who hugged the beautiful bosom of the hunter's daughter brimming with fragrant paste.

## சந்தானகுரவர்

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே. 5

---

## The Line of Gurus

5. Lord Guru of the Devas seated on Mount Kailas, Nandhi the holy warden of the lofty hill, (Sanatkumara) one of Nandi's community of disciples, Satyagnanadarisanigal of wide fame reaching afar in the world, the great Paranjoti, the reputed hero Saint Meykandar of Tiruvennainallur, the illustrious Saint Arulnandhi of changeless repute, and Saint Maraijnanasambandar endowed with the riches of spotless grace are our masters in this line of hereditary transmission of spiritual wisdom.

## மறைஞானசம்பந்தர்

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
    பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
    சைவசிகா மணிமருதத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதே மதியம்
    கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
    திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம். 6

---

## Maraijnanasambandar

6. On our head shall we entertain the flower like feet of growing beauty of our spiritual father Maraijnanasambandar of perennial fame who is the crown gem of Saivism. For perpetuating the descent of spiritual wisdom on earth, for the popularisation of the many sided Sama Veda and the renown of the line of the great Parasara, he came to the world and redeemed us. He was born at Marudur and flourished at Pennagadam encircled by the cloud capped cool fine groves, from whose boundary walls the lofty banners with their hand-like fringes shot up and impeded the passage of the moon along the sky.

### நுதலிய பொருள்

புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகல்அளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய்இருள்வெளிபோற்பேதமும்சொற்பொருள்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல்சொன்ன [போல்
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவரும்அத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றாம். 7

---

## The Substance of the work

7. We intend to expound herein the truths of the Saiva Siddhanta System, the distilled essence of the Vedanta, which is dark to the heathen and bright to the adherents of inner creeds and satisfying the reputed standards of logic, and which is remarkable for advocating such inseparable Adwaitic (non-dual) union of God and the world as will not warrant their substantial identity like Gold and jewels made of it, or their opposition like light and darkness or any midway relation like that of word and sense. Such union will be comparable in their unity to the blending of body and soul and in their diversity to the light of the eye and the light of the sun and in their concomitance to the knowing power of the soul and the seeing power of the eye, and will be realisable as the fruit of a course of righteous practice ordained by great books of wisdom.

### தீக்கை முறைமை

மூவகைஆ ருயிர்வர்க்கம் மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமாம் எனஉருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
பரவிவரும் ஔத்திரியாற் பாச நாசம்
மேவஅரு ளுதவும்அவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே. 8

---

8. The sum total of all souls falls into three categories, the first consisting of those affected only by the bond of darkness (the original bond), the second of those affected by the bonds of darkness and karma, and the third of those affected by the bonds of darkness, Karma and Maya. On the principle of showing like to like (in catching animals) the Lord comes to redeem the man affected threefold in the guise of man and confers on him the grace needed to break the bonds by means of his holy look, touch, bright mystic word, force of thought, instruction in scriptures and yogic practice and by performance of homa which will be either external or internal. The former is known as initiation by action and the latter initiation by knowledge.

விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனாதி காரம்
மேவும்யோ காதிகாரம் எனச்சமய விசேடம்
வரும்பொருவில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
இரங்கடையில் தொகைபதினொன் றெண்பத்தொன் றைம்
றிருநூற் றிருபத்து நாலாறு றைந்திற் [பத்தொன்
பரந்தநெறி அறுவகையும் ஒருவிவினை வரிதாம்
பரபதத்துள் உயிர்விரவப் பயிற்றுமன்றே. 9

---

9. There are three forms of initiation; the first known as **Samayam** qualifies one for the use of Mantras, the second known as **Visesha** qualifies one for specialising in rites of worship and yogic practice, and the third known as Nirvana leads into the path of spiritual wisdom by helping the soul to get clean of the six kinds of ways through which the fruits of Karma reach it. The said ways lie through the region of Mantrams, pathams, and letters on the one hand and that of world centres (Bhuvanam), Tatwas and Kalais on the other, Mantrams number eleven, pathams eighty one and letters fifty-one, and world centres two hundred and twenty four, tatwas thirty six and Kalais five.

கிரியையென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் உண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கள்
மருவியிடும் உயர்ஞான மிரண்டாம் மாறு
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதும்
சிவாகமமென் றலகறியச் செப்பும் நூலே. 10

---

10. Scriptures say that all kinds of pious act lead to the attainment of spiritual wisdom. The true Sariya (subsidiary service), Kiriya (rites of worhip) and Yoga lead directly and respectively to Saloka (living in the heaven of God), Sameepa (living near God) and Sarupa (attaining the form of God) and indirectly to the attainment of high wisdom. The uplifting spiritual wisdom is of two grades the one being God's grace which is in his eternal wisdom that lastingly takes up the soul after its redemption from the inveterate bonds and the other being the clear wisdom inculcated by Saiva scriptures pointing the way to realisation of such grace.

நூன்மரபும் பெயரும்

தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி
விளம்பியநூல் அவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்தினுறை திருவருளும் இறைவன் நூலும்
கலந்துபொது உண்மையெனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்
ஆசில்சிவப் பிரகாசம் ஆகு மன்றே. 11

---

11. The reputed Lord Guru (Saint Meykandar) composed the great Sivagnanabodham and later his spiritual son (Saint Arulnandi) expanded its truths in his work Sivagnana Siddhi. My worship is due to their holy feet. I eagerly studied the two books, and collating their ideas with what was revealed by holy grace in my mind and the views of Sivagamas on the subject, condensed them into a work of one hundred progressive verses in Virutha metre consisting of two parts general and special actuated by my intense ambition; and even my work has taken shape as spotless **Sivaprakasam.**

### அவையடக்கம்

தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
    தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினார் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
    நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினார் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
    தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினார் பலர்புகழில் ஏத்துவர்ஏ திலருற் [லரே.
    றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றி

---

## Appeal to Readers.

12. Whatever is old cannot be deemed to be good (on account of its antiquity alone) and whatever book comes forth today cannot be judged ill because of its newness. Men pledged to seek good in everything will not mind the dust that covers a beautiful gem but only appreciate its true worth. People of middle calibre will investigate and welcome the beauty and antiquity of a work. Men who have no capacity to judge of the faults, excellences and substantial work of a production will praise it, if many admire it, and will in the same breath condemn it on hearing others speak ill of it, because they have no opinion for themselves.

# பொது அதிகாரம்

## முதற் சூத்திரம்

### பதியிலக்கணம்

பலகலைஆ கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணம்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகி லுயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே. 13

---

### Godhead

13. It is the object of all the vedas and the agamas dealing with multifold sciences to expound the concepts of God, bound souls, and bonds (Pati, Pasu, and Pasam). Of these, God-head is the highest. It is beyond the material distinction of form and no form; It has no finite quality or mark; It is ever free from bonds; It is one and eternal. It is the energiser of the intelligence of countless souls; It is changeless and infinite; Its form is bliss; It is above the ken (reach) of the perverted; but it is the final goal of the right-minded; It manifests itself in the smallest of the small and is the biggest of the big. It is self-effulgent; It is named SIVAM by men of clear vision.

நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்
    நிறைகிரியைதர அதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு உருவ மாகி
    நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
    கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கு மேனி
    பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே. 14

---

14. The eternal supreme power of God manifests itself as Love, Wisdom, and Will; and God in contact with each, takes up the holy form of grace inestimable, and by energising the luminous expansive pure-maya, causes the evolution of Nadam, Bhindu and other pure reals and of the word roots of knowledge. Again, by energising the impure Maya, He causes and maintains the grand development of bodies, minds, worlds, and substances which are the channels of cruel Karma. In time He brings about the involution of all these. Immanent aspect of God in relation to these processes is viewed as formless and formful, limbless and full-limbed.

ஈங்கிதுஎன் றதுகடந்த இயல்பி னானும்
ஈறுமுதல் நடுவொன்று மிலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்
உண்மைபிறர்க் கறிவரிய ஒருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாம்
சார்வரிய தனிமுதல்வன் ஆத லானும்
நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்ற லானும்
நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே. 15

உலகமெலாம் ஒருவனோ டொருத்தி ஒன்றென்(று)
உளதாகி நின்றளவில் ஒடுங்கும் பின்னும்
மலமதனால் உளதாகும் உருவ மாறி
வருவதுபோ வதுசெல்வ தாத லானும்
அலைவில்அசே தனமாயை ஆத லானும்
அணுக்களுரு அடையும்அறி விலாமை யானும்
நிலவுதொழில் மருவிஉரு நிற்ற லானும்
நின்றெவையும் அளித்திடுவன் நிமலன் தானே. 16

---

15. God is of a nature beyond spotting and specifying. He is without beginning, middle and end. He is full of overwhelming and all-pervading intelligence. He is unique in being above the comprehension of all others. He is the sole Lord whom intolerable likes and dislikes cannot reach. He is the life inseparable from all lives, and is unbound. He can, therefore, take up and energise for himself any form He wills.

16. The universe comes into being in forms male, female, and sexless. It endures and suffers

கந்தமலர் அயன்படைக்கும் உலக மெல்லாம்
    கண்ணன் அளித் திடும்அவைஎம் கடவுள் தானே
அந்தமுற அழித்திடுவன் ஆத லாலே
    அயன் அரியும் அவனதுயர் அதிகா ரத்து
வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்
    வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானின்
முந்திரவி எதிர்முளரி அலர்வுறும்ஒன் றலர்வான்
    முகையாம்ஒன் றுலரும் முறையி னுமே. 17

involution in due processes of time. Subsequently it undergoes re-evolution on account of bonds from which souls have to be freed. Forms change, appear, move, and disappear. Maya, their primordial basis is by itself motionless and unintelligent. The bound souls have not the intellectual freedom to assume forms of their own accord and yet they are embodied and do their work. So, it is the unbound supreme being that is the moving cause of all.

17. All the worlds created by the lotus-seated Brahma are protected by Vishnu and their final dissolution is by our God, so that creation and protection are at an end. Brahma and Vishnu are the duly empowered agents of the Higher Being whose work is done through them and who is the real author of all. He remains unaffected by these functions, like the sun in the sky before whom one lotus puts forth its bud, another blossoms in full, and a third fades and falls.

ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக
இயம்புவர்கள் அணுக்கள்இடர்க் கடல்நின்றும் எடு
ஊற்றமிக அருள்புரிதல் ஏது வாக [த்தே
உரைசெய்வர் ஒடுக்கம்இளைப் பொழித்தல் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகம்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரும் அருள்அருளே யன்றி மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே. 18

---

18. These functions which God has taken up are styled the play of His Grace, meant to lift the souls from the sea of misery to the seat of abiding bliss. Involution has the aim of wiping out the fatigues of birth and death. Re-evolution is to render bonds fit for dissolution. Protection means making souls enjoy the fruits of Karma; and screening is to steady them in such enjoyment. The bestowal of ineffable bliss (in the end) is indeed a clear act of grace, and the other functions too can be attributed to nothing but the adorning mercy of God.

## இரண்டாஞ் சூத்திரம்

### பசு இலக்கணம்

எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக் கீடான ஆக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவைஅவரா யதனால்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்
உற்றிடும்நற்பசுவருக்கம்எனஉரைப்பர்உணர்ந்தோர்.

---

### Bound Souls

19. The seers of truth say that souls are countless, eternal, and sunk in spiritual darkness. By the grace of God, they take up bodies suited to work out their two-fold (good and evil) karmic tendencies, and are born as lower and higher beings. In the course of experiencing the endless fruits of their Karma, they commit acts of merit and sin and have births and deaths. When the season arrives for the dissolution of the dark bond affecting the soul, the light of Grace in the inmost soul dawns and darkness is dispelled. Then the good freed souls reach the feet of Providence.

### பாச இலக்கணம் - ஆணவம், திரோதாயி

ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
    எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
    மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி
    பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்அது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையான் அடிகள்
    நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே. 20

---

### Bonds - Anava, Throdhana

20. The original bond of darkness (anavam) is one eternal entity with countless powers which lapse their efficacy at the end of their respective time limits. Compared with the stupefying force of this bond external darkness may be said to be light. It is like green rust (verdigris) on copper and fully hides the knowing faculty of the soul. The screening power of God which operates behind this bond to loosen and finally dissolve it is also formally styled one kind of bond. When the original bond is dissolved, this divine power shines forth in great grace and quickens the progress of the freed soul towards the feet of the supreme being whose will, love, and power are symbolised by the serpent the moon and the Ganga on His braids.

சுத்த மாயை

உன்னலரும் பரசிவன்தன் அருளாலே நாதம்
உதிக்கும்மிகுங் குடிலைதனில் விந்துவரும் நாதந்
தன்னில்அதி னொளிவளரும் சதாசிவராம் அவரில்
தயங்கவரும் ஈசர்வித்தை தனைஅளிப்பர் அதனுல்
மன்னுவர்இவ் வகைஐவர் வாய்மையினும் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று
மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்துளோரே. 21

---

## Pure Maya

21. Experts well versed in rare agamic sciences say that by the loving will of the Supreme Sivam, beyond thought, the real of Nadam is evolved from pure maya; and from nadam, the real Bhindu emanates. From it the brightening real of Sada Sivam takes its rise and gives birth to 'Iswaram' from which is developed 'Sudda Viddai'. All these five reals are respectively ruled by five agents of divine power who stay in and take their names from them. Bhindu, stated to be already evolved from Nadam, first unfailingly gives rise to the word which develops into four forms beginning with the subtlest.

## அசுத்த மாயை

உருவாதி சதுர்விதமாய் ஒன்றொன் றொவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்றாய் என்றும்
அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும்
ஆவார மாய்அசித்தாய் அசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மெலியவை ஒடுங்க
வருகாலம் உயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளால் மாயை தானே. 22

---

## Impure Maya

22. The Impure Maya is a formless, motionless, unintelligent eternal entity from which are evolved reals of diverse qualities and functions, from combinations of which spring up the four categories beginning with bodies. It permeates all its developments and causes perversion to karmic souls. During final dissolution of all the tatwas it is the basic resort of all souls, and is itself a bond of the souls. All the processes in it are due to the energising of it by the gracious might of the Supreme Being.

என்னையிது எனின்உலகுக் குபாதான மில்லை
இறைவனல தெனின்அசித்துச் சித்தினிடத் துதியா
மன்னியுள தேல்முதல்வன் என்கொல் என்னின்
மாயைதான் அசித்துருவாய் மருவ மாட்டா(து)
அன்னவனும் இதுவொழிய ஆக்க மாட்டான்
அசத்தனும் எனின்அதுவும் அவன்போல் நித்தம்
முன்னவன்அவ் வசித்தைவிரித் தெவையும் ஆக்கும்
முதன்மைஅது கொடுத்ததெனை மொழிந்தி டாரே. 23

---

23. If it is asked what this maya is, the answer is that it is the substantial cause of the universe. To meet the statement that God and not maya is such cause, it is to be stated that the unintelligent world cannot spring from supreme Intelligence. The question may take another turn as what the need is for a God if Maya itself evolves into the world, for which the rejoinder is that being unintelligent, maya cannot itself develop into forms and substances. Then one may say that it detracts from God's omnipotence not to be able to create without maya. The right view is that though maya is as eternal as God it is God who is the master who wields it to create any form He pleases and so maya cannot be said to invest God with his lordship.

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்பர்
அடுத்தவினை உளதாயின் இறைவன் என்னில்
அசேதனம்மற் றவையாவிக் கமைத்த தாகும்
எடுத்தவினை உருவுறுவ துயிரேல் தானே
இருவினைக்குத் தக்கவுடல் எய்து மென்னில்
சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே 24

---

24. It is often asked why creation is not homogeneous but of diversified forms as birds, beasts and man. The diversity is due to the varied nature of past karma. If karma can account for creation why there should be a God is another question. Again, the answer is that karma by itself is unintelligent and to suit varied karma, bodies have to be devised by the intelligent Being. If it is said that souls being intelligent can themselves take up suitable karmic bodies, it is against the fact that the souls have no intelligence free enough to do so. So there is no ground to infer that such soul and the sum of unintelligent entities duly come together (without a God to unite them).

அல்லல்மிக உயிர்க்கிவைதான் அணைத்த ஈசன்
அருவினைகள் அருந்துதற்கோ வினையோ அன்றிச்
சொல்லிவரு மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததெனும் உரைமுதலோர் தொடக்கி லார்பால்
ஒல்லைவரு மெனின்உளதாம் உயிருண் டாவே
உளதுமலம் மலமுளதா ஒழிந்த வெல்லாம்
நெல்லின்முளை தவிடுமிபோல் அனாதி யாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே. 25

---

25. If bodies are attached to souls by God to make them suffer growing woes due to inevitable karma, the question arises what enveloped the soul first, karma or maya. There can be room for such a question only if karma or maya affects the soul, not from the beginning but, in the interval of its course of existence. While the soul exists the bond of ignorance also exists along with it, and when that exists the other bonds of maya and karma also remain with it. The three bonds are comparable to the bran, husk and germ of a grain of paddy and are said to be beginningless. This is the view of Sivagamas.

### தத்துவங்களின் தோற்ற ஒடுக்கம்

அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை
அராகம்இவை அனந்தரால் மாயைதனி லாகும்
உருத்திரராற் கலையதனில் பிரகிருதி குணங்கள்
உளவாகும் ஆங்காரம் புந்திதனில் உதிக்கும்
தெரித்தவிது திரிவிதமாம் தைசதவை காரி
திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்
விரித்தகுணம் மனம்புத்தி இந்திரிய மென்று
விளம்பியவோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

---

## Evolution and involution of Reals from Impure Maya

26. The reals which incline the soul to worldly experience namely time, destiny, animation, intimation, and inclination are evolved out of impure maya through the agency of Anantha; and from the real of animation (கலை) mulaprakriti is evolved, through the agency of Srikanta Rudra. From mulaprakriti is evolved the real of Guna from which emanates the real of judgment or intellect (புத்தி) and from judgment is evolved the real of willing (அகங்கரம்). Ahankara is of three kinds according as the satwic, Rajasic or Thamasic quality dominates. From Satwic Ahankara (தைசதம்) are evolved the mind and the five senses of hearing, touch, sight, taste, and smell.

மன்னியகன் மேந்திரிய மானஇரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவரும் சத்தம்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
தரும்இதனில் வான்அநிலம் அனல்புனல்மண் சத்தம்
முன்னதனில் வெளியாதி ஒன்றொன் றாகும்
முறையிலுறும் இருமைஅயன் முடிவா முன்னே
உன்னுசதா சிவராதி அதிபதிகள் ஒடுக்கம்
உதித்தஅடை வெனஉரைப்பர் உணர்ந்து ளோரே.

---

27. From the Rajasic Ahankara (Vaikari) are evolved the reals of activity beginning with speaking. From Thamasic Ahankara (Bhutati) emanate the five subtle bases (Tanmatras) of the five elements beginning with the principle of sound. The five elements, ether, air, fire, water, and solid are developed each out of its respective Tanmatra. The titular deities of the five elements are Brahma, Vishnu, Rudra, Maheswara, and Sadaṣiva of the regions in pure maya. According to the opinion of the learned the reals undergo involution into the bases from which they are evolved.

**கன்மம்**

நண்ணியிடும் உருவதனுக் கேது வாகி
        நானாபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும் ஆதலால் அனாதி யாகிப்
        பலவாகி அணுக்கள்தொறும் படர்வ தாகி
எண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்றும்
        இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
        பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே. 28

---

## Karma

28. Karma is the cause of bodies and multifold bodily experiences, and causes births and deaths, and is beginningless. It affects each soul differently and is manysided. It is committed through thought, word and deed, and it takes shelter in the real of the intellect. It takes the form of merit and sin producing its two-fold result. At the time of dissolution of reals, karma sinks down to the substratum of impure maya. This is the nature of karma.

கன்மநெறி திரிவிதம்நற் சாதிஆயுட் போகக்
கடனதென வருமூன்றும் உயிரொன்றிற் கலத்தல்
தொன்மையதா மல்லதுணை வாகா தானும்
தொடங்கடைவின் அடையாதே தோன்றும் மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகம்ஆன் மிகமாம்
தகையிலுறும் அசேதனசே தனத்தாலும் சாரும்
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவணூன்
நாடில்அதன் ஊழ்வினையா நணுகுந் தானே. 29

---

29. The path of karmic result is threefold as organism, age, and experience. These three attach to each soul as a result of past karma, as what is not destined cannot be made the subject of experience. The results of karmic acts do not always follow their happening. They issue through accident, action of elements, and acts of souls and may happen through intelligent and unintelligent agents. The soul doing good and evil acts will be found on investigation to be influenced by its past karma.

மேலைக்கு வருவினைஏ தென்னின் அங்கண்
விருப்புவெறுப் பெனஅறிஅவ் வினையும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் என்னின் நாம்என்
முற்றிஅதன் பயன்உனக்கு முளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகள்இரு திறனாகும் புந்தி
நண்ணாத வினைநண்ணும் வினையெனஒன் றிரண்டாம்
ஏலத்தான் இதம்அகித மாம்இதனால் வழுவா(து)
எய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே. 30

30. If it is asked how karma for the future arises, it should be borne in mind that it results from the likes and dislikes which arise in the course of experiencing the fruits of past karma. If such likes and dislikes be viewed as resulting from past karma they are not simply experienced as such but they engender the egoistic feelings of love and hate which develop and ripen into future karma. Karmic acts in the world are of two classes, those done with knowledge and those done without knowledge. Each is of two kinds according as it causes pleasure or pain, and are respectively termed acts of merit and sin which unfailingly affect the soul.

உற்றதொழில் நினைவுரையின் இருவினையும் உளவாம்
ஒன்றொன்றால் அழியா தூன் ஒழியா துன்னில்
மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரும் மரபில் ஆற்றப்
பற்றியது கழியும்இது விலையால் ஏற்கும்
பான்மையுமாம் பண்ணாது பலிக்கும் முன்னம்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோரும்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே. *31*

---

31. The twofold karma is committed in the form of word, thought, and deed. One karmic act is not destroyed by another, and each affects the soul independently and unfailingly. However, when a sinful act is expiated in the way indicated in vedic and saivite scriptures, its attachment to the soul is annulled. Expiation may be done by a paid deputy. Without the expiation the effects of sin may be counteracted by pursuing a right course of conduct prescribed in scriptures, as a result of which the strength of sin will fade and whatever residue remains may continue to affect the soul lightly in the birth to come.

### பஞ்ச மலங்கள்

மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
　　மூலஆ ணவம்ஒன்று முயங்கி நின்று
பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று
　　பகர்மாயை ஒன்றுபடர் கன்மம் ஒன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
　　செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)
ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாரு(து)
　　அருளென்ப தரிதென்பர் அறிந்து ளோரே. 32

---

## The Five Bonds

32. According to the view of scholars, there are five bonds which affect the soul:— (1) The original bond of anavam which is the perennial companion of the soul causing infatuation, (2) the screening power of god which stands behind and befits it for dissolution, (3) the pervasive maya (impure), (4) Karma which pursues the soul through births, and (5) the set of reals of pure Maya which are the impelling forces behind bodies, minds, worlds, and substances. Without getting rid of these bonds the soul cannot come in for the full Grace of God.

அவத்தை இலக்கணம் - கேவலாவத்தை

ஓங்கிவரும் பலஉயிர்கள் மூன்றவத்தை பற்றி
 உற்றிடுங்கே வலசகல சுத்தமென உணர்க
ஈங்குவரும் கலாதியொடு குறிஉருவம் ஒன்றும்
 இன்றிமல மன்றியொன்று மில்லையெனும் இயல்பாய்
ஆங்கறிவை அறிவரியன் அறிகருவி அணையா
 ஆதலினல் இருள்மருவும் அலர்விழிபோல் அதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமாய் அங்கண்
 நிற்பதுகே வலமென்று நிகழ்த்தும் நூலே. 33

---

State of Exsitence of Souls – The Solitary State

33. The progressive souls, which are countless, are in three states of existence viz., solitary, embodied, and pure. The scriptures say that solitary state is one in which the soul is not attached to any real like kalai etc., and it has no body, causal, subtle, or patent. There is nothing but the bond of ignorance encircling the soul. In this state the soul is not able to perceive its own intelligence, and it cannot perceive the external world because no instrument of knowledge is attached to it. The soul is then like the open eye immersed in darkness. It is one with the bond of ignorance, unchanging and pervasive and it knows no way of getting rid of the bond.

இன்மைமலம் மாயைகன்மம் என்றிரண்டே இறைதான்
இலங்குபல உயிர்களும்முன் புரிந்தஇரு வினையின்
தன்மைகளால் எவர்களுக்குந் தனுகரண புவனம்
தந்திடும்இங் கதனாலே இருப்பயனும் சார்ந்து
கன்மமெலாம் நேராக நேராதல் மருவக்
கடவுள்அரு ளால்எவையுங் கழித்திடுவன் அதனாற்
பின்மலமா னவைஅணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசுமாறே. 34

---

34. There is a theory that there is no bond of ignorance at all, Maya and Karma being the only two bonds which affect the soul. According to it, God gives all the souls bodies, minds, worlds and substances in accordace with their past twofold karma. The soul runs through the cycle of births and deaths and when all the karmas are balanced so as to be washed off in a single birth, God by His grace puts an end to all bonds so that no bond can subsequently affect the freed scul which shines in its own effulgence. What a defective theory this is!

மாயையுமுத லெனவினையின் பான்மையுமுத லெனவே
மன்னுபனை விதைமரமின் மயங்கும்மலம் சுத்தற்(கு)
ஏயுநெறி யென்கொல்அதன் இயல்பாயின் முத்தி
என்பதென்மற் றிவைநிற்க இருங்கலாதி உணர்வாய்
மேயபினர்த் தன்னுருவம் விளங்காமை விளக்கும் [வுள்
மிகும்உலகந் தனில்என்னில் இவைவிடுங்கால் உணர்
தோயுநெறி இலதாதல் அறியாமை யெனில்
சொல்லியது மலமென்பார் துணிந்துளோரே. 35

---

35. To posit the existence of only maya and karma will raise the question of their priority which will lead to an argument in a circle like that of the seed and the tree. Furthermore, the question will arise how a bond can affect pure souls. If you say it is natural, they may be affected even after salvation. If so what is the good of salvation? Suppose you say in the embodied state, the reals which attach to the soul do not show it its own true nature but only external world, then, when the soul is disembodied, it must go back to a state of self–knowledge, which, in fact, it does not. What is the cause of it? If you say it is ignorance, we say the cause of such ignorance is the original bond of ignorance or anavam.

அங்கியமா னவைஉணர்த்தி அநங்கியமாய் நிறைந்த
அறிவறியா மையினானும் அருள்நிலவும் காலந்
தன்னில்அவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானும்உயிர் தானெனவொன் றிலதா
மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடும்இங் கிதுவழுவா தாதலினான் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதென்(று)
உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே.

---

36. It is the nature of anavam to stay with the soul inseparably (so that in the solitary state the soul cannot know it). In the embodied state it remains with the soul, while Maya and Karma, which contact and leave, then show the soul only the external world and not Anavam. When the soul is in combination with these bonds it cannot understand the supreme intelligence which is in adwaitic union with it; and it is only when the soul attains grace it knows the old eternal union with God along with everything. So till the stage of pure grace is reached which is beyond all thought, the existence of anavam is not realisable by the soul. So you cannot now directly perceive its existence.

### சகலாவத்தை

புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளாற் போதம் தீபம்
சகலமெலாம் உடனாய வாறு போலுந்
தரும்அருளை மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை
எய்தும்இவை தம்செய்தி இலங்கும் விந்து
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினால் ஒருநாதம் படருந் தானே. 37

---

### Embodied State

37. By the grace of God the reals beginning with Kalai and the word forms arising from pure maya are attached to the soul to counteract the bond of ignorance in question. The knowledge developed thereby is comparable to the light produced by the combination of lamp, oil, and wick. Nonetheless, the bond of ignorance continues to conceal the helping grace of God from the soul. Anavam and Maya compete with each other like darkness and light, the one always hiding things and the other illumining them. The way in which knowledge is developed in the embodied state is as follows: From 'bhindu' shining at muladhara an imperceptible subtle sound, which can illumine the soul to the extent of its karma, starts and rises up to the region of navel.

வாக்குகள்

வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வரும்அடைவு படஒடுக்கி மயிலண்ட சலம்போர்
சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி உயிரிற்
சேர்ந்துவரும் அவைமருவும் உருஎவையும் தெரித்து
முந்தியிடும் செவியில்உரு துள்ளுணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான் வைகரியில் உதானன்
பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழி செவியின்
பால்அனைய நினைந்தபொருள் பகரும் தானே. 38

---

## Letter Sounds of Speech

38. There the letter sounds of speech attain an embryonic stage and reach the heart where the whole lot remains like the liquid in the peacock's egg containing its colours in a compressed form and helps the soul to perceive things in an undefined manner. It then bears the name Paisanthi. Subsequently Prana acting on the lot helps to develop sound forms in a suppressed manner which rise to the inside of the neck and help to think in detail though they are then inaudible. They, then, bear the name Madhyama. When they become audible owing to the action of Udana on them, they reach the root of the tongue and help to express ideas to others. Then they bear the name 'Vaikari'.

### தத்துவங்கள் காரியப்படும் முறைமை

இத்தகைமை இறைஅருளால் உயிர்அறியும் அறிவுக்(கு)
ஈடாக வாடாதே ஈரிரண்டில் உரைத்த
வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம்
மேவியிடும் எனஉரைப்பர் அசுத்த மாயை
வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை உயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்தே.

---

## How the Reals work

39. The four stages through which the word is unfailingly developed for enabling the soul to know things to the extent of its karmic capacity are due ultimately to the action of divine power. By the help of these and that of the five lords of the five pure reals who energise other tatwas, knowledge is said to come home to the soul. The real of Kalai evolved out of impure maya puts aside the original bond a little and quickens the soul. The real of Vidya ('intimation') conveys to the soul the knowledge imparted by the intellect and derived from the senses. These reals act by dint of the pure divine sakthi which actuates them

பேசரிய அராகம்தம் கன்மத்துக் கிடாப்
    பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் நியதி
தேசமிகும் அரசர்தரும் ஆணை செய்தி
    செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல
நேசமுறு தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்
    நிகழ்காலம் கழிகாலம் எதிர்கால மென்றே
ஓசைதர வருங்காலம் எல்லைபலம் புதுமை
    உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே. 40

---

40. The real aragam (inclination) increases the desire in things obtained by the soul according to its karma. The real of destiny (nyathi) appropriates the fruits of karma to its author just like the ruler who orders the fruits of action to be reaped by the doer. The real of time (kala) which takes the shape of past, present and future makes the soul experience the limit of action, realise its fruit and feel a novelty in things to come. All these reals act through divine power which is behind them.

ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம்
　　அதுபுருட தத்துவமென் றறைந்திடுவர் அறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனின்இதற்கும் சுத்தி
　　மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்பும்
செய்வகையின் தொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்கும் குண
　　சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் அவைதாம் [த்தின்
இவ்வகையிற் சாத்துவித ராசததா மதமாய்
　　இயம்புவர்கள் ஒன்றிரண்டு குணப்பேற்க உடைத்தே.

---

41. The condition of the soul in combination with the five reals mentioned above which tend it to worldly experience is named as the real of "Purusha" by scholars. In the ceremonies of purification of Kalais as situated in different parts of the body, there is reference to the purification of this as well in the scriptures.

The real of mulaprakriti has in it the embroyonic combination of the Gunas which produce the sequel of past karma. The Gunas are of three kinds viz., Satwic, Rajasic and Thamasic (which respectively represent the pleasant, desirous, and sad aspects of temper). Each has two distinct qualities.

அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
அடர்ச்சிமிகுங் கவுரவம்அ நியமம்இவை அடைவே
நிலவியிடும் மும்மூன்றும் உயிரொன்றில் கலந்தே
நிற்கும்இவை நிறைபுலனின் பயன்எவையும் கவரும்
குலவிவரு போகங்கள் இடமா மாறுக்
குறைவில்ஒளி யாம்அலகில் புலனிடத்தின் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே. 42

---

42. The aspects of Guna are countless. Brightness and gentleness are the distinct features of Satwic Guna. Movement and exertion distinguish the Rajasic guna. False conceit and impropriety are Thamasic Gunas and their modifications are nine in number. All these affect each soul. The tamasic Guna attracts to the soul the uses of external objects. The Rajasic guna moves the soul to their enjoyment and the satwic guna gives unchanging full enlightenment. The real of Buddhi (intellect) unifies the countless objects of knowledge in diverse ways and with the aid of divine power it gives rise to fifty sorts of manifestation and more.

ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி
　　ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்
யானலது பிறரொருவர் எனையொப்பார் புவியின்
　　இல்லையெனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதின் முந்தியுறும் இச்சை
　　தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து
மானதமா னதுநிற்கும் சிந்தைநினை வையம்
　　வந்துதரு மனமொழிய வகுப்பொ ணாதே. 43

---

43. The real of ahankara is the moving force behind the breathing process in the body, and is the cause of overweening egoism which hardly quits the soul. It is the will that animates the action of the senses.

The real of the mind in the form of desire impels the senses to get hold of objects. Its function is thought and perpetual motion. Its investigating and doubting aspect is known as Chittam.

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டம்இவை ஐந்திற்கும் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்தம்
மருவியிடும் இவைஅடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினோ டுபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே. 44

---

44. The five senses already mentioned which are respectively situate in the ear, skin, the eye, the tongue and the nose perceive sound, touch, form, taste, and smell in order. The reals of action situate in the mouth, the foot, the hand, the excretary and sex organs have the functions of causing speech, walking, handling ejecting, and delighting.

முந்தியஐம் பூதங்கள் வானாதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்நாமெய்ம் முறையால்
இந்தவயி னின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்முருவின் இலங்கியிடும் புறத்து
வந்தடைய இடங்கொடுக்கும் நிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டும்தீ வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கும் நீர்குளிர்ந்து பதமே
தரும்உரத்துத் தரிக்குமிகு தரணி தானே. 45

---

45. The five elements (already mentioned) beginning with ether attach themselves to the ear, the skin, the eye, the tongue and the nose and aid in the perception of sense objects by the soul staying in the body. Jn the external world ether permanently accomodates the other elements; air causes movement and heaping of things; fire heats and unifies them; water cools and softens things; and earth, the primary element, hardens and bears objects.

இந்நிரையின் ஐந்துசுத்தம் ஏழ்சுத்தா சுத்தம்
　　எண்மூன்றும் அசுத்தமெனும் இவைமுப்பத் தாறும்
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந் துயர்தாம்
　　மருவும்உரு நிலையழிய வரும்பொழுது வரியார்
பன்னகம்அண் டசம்கனவு படர்வகையே முன்னம்
　　பகரவரும் கலாதிநிலை பரவியசூக் குமமாம்
தன்உருவில் அணைந்துபயன் அருந்திஅரன் அருளால்
　　தரையினிடை வருமென்று சாற்றும் நூலே. 46

---

46. Thus there are thrity six reals, five pure, seven mixed and twenty four impure. Entangled amidst these reals, the soul undergoes a long course of misery and when it quits the body it casts it off as a snake discards its slough, and as the young bird breaks through the egg and suffers a change of personality as in a dream. Even though the patent body is thrown off the soul attaches itself to the persisting subte body, of which kalai and the like tatwas are constituent parts, and travels to other regions and after reaping the fruits of karma there it comes back to earth by the will of God. This is the view of the scriptures.

தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்
துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கின்
ஊற்றமிகு தாவரங்கள் பத்தொன்ப தென்றும்
ஊர்வபதி னைந்தமரர் பதினொன்றே டுலவா
மாற்றருநீர் உறைவனநற் பறவைகள்நாற் காலி
மன்னியிடும் பப்பத்து மானிடர்ஒன் பதுமா
ஏற்றியொரு தொகைஅதனில் இயம்புவர்கள் யோனி
எண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே. 47

47. The sources of birth are of four kinds, namely the egg, sweat, vegetable roots and the womb. And the categories of living beings are seven in number each of which has numerous organic varieties. The plant kingdom has nineteen hundred thousand varieties. Of the creeping creation there are fifteen hundred thousand. Of the celestial beings eleven hundred thousand. Creatures in water, birds of the air and beasts on earth count each ten hundred thousand. Mankind falls into ninehundred thousand, so that all the seven make up a total of eighty four hundred thousand varieties.

சுத்தாவத்தை

இனையபல பிறவிகளின் இறந்துபிறந் தருளால்
    இருவினைகள் புரிந்தருந்தும் இதுசகலம் அகலா
முனமருவும் இருபயனும் ஒருகாலத் தருந்த
    முந்துறுக ருந்துபயன் அந்தமுற வந்த
வினையுமெதிர் வினையுமுடி வினைஉதவு பயனால்
    நேராக நேராதல் மேவுங் கால்முற்
றினமருவு திரோதாயி கருணை யாகித்
    திருந்தியசத் திபாதந் திகழுமன்றே. 48

48. The state of going through births and deaths in these categories, doing karmic acts and reaping their results by the will of God, is the embodied state of the soul. When the store of past karmas attaching to the soul, the set of karmas pertaining to the present birth and the group of budding karma for the future are all balanced alike so as to be terminated in a single birth, on account of the indifferent attitude of the soul thereto, the screening power of God, indignant hitherto, turns into the sweet grace of God, the impact of which on the soul takes place in consequence.

### சத்திநிபாதம்

நாடியசத் திநிபாதம் நாலு பாதம்
    நண்ணுவகை எண்ணரிய ஞான பாதம்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
    கூத்தன்ஒரு மூர்த்திகொடு குறுகி மோகம்
நீடியகே வலசகலம் நிகழா வாறு
    நிறுத்திமலம் அறுக்கும்இது நிலையார் சுத்தம்
கேடில்புகழ் தரும்சரியை கிரியா யோகக்
    கேண்மையரேல் இவைஉணர்த்தக் கிளக்கும் நூலே.

---

### Fall of Grace

49. The said Fall of Divine Grace is of four grades. To the souls of the highest grade, who are fit for receipt of spiritual wisdom, God, who has been their innerlight, appears directly in a visible form as Guru, cuts off their bonds, stops the recurrence of the solitary and the embodied state and ushers in the pure state of existence. These truths should be revealed, according to the view of the scriptures, to them who have been trained in Charya, Kriya and Yoga paths.

### முத்தி பேதங்கள்

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே. 50

---

### Kines of Absolution

50. Diverse goals are aimed at, as absolution, by different creeds. They are the pleasures of women, the annihilation of five categories of experiences, the subdual of three gunas, the destruction of karma, the mere dissolution of bonds, the immortality of the body, the realisation of the self, the annihilation of the soul, the attainment of siddhis and deadening of consciousness as in a petrified condition. All these are of blameable nature. The realisation of supreme bliss by the attainment of divine grace in consequence of the dissolution of three bonds is the highest and faultless of all.

# உண்மை அதிகாரம்

இங்கிவைபொதுஇயம்பும்என்பர்கள் இதன்மேல் ஆன்மாத்
தங்கிய அஞ்ச வத்தை தன்னுண்மை உணர்த்தும் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை அதன்பயன் புனிதன் நாமம்
அங்கதின் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளினாலே.

---

## Special Part

51. What have been dealt with hitherto constitute the general part of the book. In the other part, called the special, I shall, with the help of the divine grace, speak of the nature of the soul, the five states of consciousness, the mode of making the soul know a thing, the nature of the rising light of divine wisdom, its effect, the use of the holy name (mantram) of God and the nature of the souls who have realised God.

## மூன்றுஞ்சூத்திரம்

### ஆன்ம இலக்கணம்

செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்ததில் அழுந்தும் ஒன்றும் அறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை அஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறுந்தனி அதிதம் உண்மை உயிர்க்கென உணர்த்துமன்றே.

உருஉணர் விலாமை யானும் ஓரொரு புலன்க ளாக
மருவிமின் றறித லானும் மனுதிகள் தம்மின் மன்னித்
தருபயன் நுகர்த லானும் உயிர்சட மாத லானும்
அருவினை உடலுள் ஆவி அறிவினுல் அறியு மன்றே. 53

---

## Nature of Soul

52. Staying in the body which attaches to it by dint of Karma, the soul gets hold of the object which it is destined to know through the senses, knows it and sinks into its experience. It does not know how it came to know it. From this condition it severs itself and assumes five states of consciousness, owing to the increasing influence of anavamalam, in the last of which it goes below the level of consciousness. This is said to be incidental to the nature of the soul in its bound state of existence.

53. The body is unintelligent. The senses perceive each a different class of phenomena. The mental faculties act upon the results of sensation.

அறிவெனில் வாயில் வேண்டா
    அன்றெனில் அவைதாம் என்னை
அறிவதை உதவு மென்னில்
    அசேதனம் அவைதா மெல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை
    அருளுவன் என்னி லான்மா
அறிவில தாகும் ஈசன்
    அசேதனத் தளித்தி டானே. 54

---

Prana is senseless. Therefore it is the soul within the inevitable karmic body that knows things with the help of the supreme intelligence.

54. If the soul can know things by itself, it does not require the implements of knowledge. If the soul is unintelligent what is the good of the implements? Can implements supply intelligence to the soul? It is not possible, for they are themselves unintelligent. If it is said that God vouchsafes intelligence to the soul, it will imply that the soul by itself has no intelligence, which conclusion is wrong since God does not make the unintelligent intelligent.

